# வங்காரியின் அமைதி மரங்கள்

## ஆஃப்ரிகாவிலிருந்து ஓர் உண்மைக் கதை

ஆங்கில மூலம் : ஜேனட்வின்டர், ஹிந்தியில் : விதூஷக்
தமிழில் : உத்ரா துரைராஜன்

# वंगारी के पेड़ – आशा के बीज

## अफ्रीका की सच्ची कहानी

जेयानिट विंटर, हिंदी: विदूषक





"பூமி தரிசாய் இருந்தது.
அதனை பசுமையால் போர்த்த முயல்வதே என் பணி''.
– வங்காரி மாதாய்

**"The earth was naked.**
**For me the mission was to try**
**to cover it with green."**
- WANGARI MAATHAI

**"ज़मीन नंगी थी.**
**मेरा मिशन उसे पेड़ों से**
**हरा-भरा करना था."**
– वंगारी माथाई



ஆஃப்ரிகாவின் கென்யா மலையின் நிழலில் பசுமைக்குடையின்கீழ் வாழ்கிறவர் வங்காரி.

Wangari lives under the umbrella of green trees in the shadow of Mount Kenya in Africa.

वंगारी, अफ्रिका में माउंट केन्या के पास, हरे पेड़ों की छतरी के नीचे रहती थी.



சமையலுக்குத் தேவையான சுள்ளிகளைத் தன் அம்மாவோடு சேகரிக்கும்போது, அங்கே, காட்டில் பறவைகளைப் பார்க்கிறாள்.

She watches the birds in the forest where she and her mother go to gather firewood for cooking.

जब वो माँ के साथ जंगल में चूल्हे के लिए लकड़ियाँ बीनने जाती, तब वो जंगली चिड़ियों को निहारती थी.



**வளமான மண்ணில் விளைந்த வள்ளிக்கிழங்கு, கரும்பு மற்றும் சோளத்தை அறுவடை செய்ய அம்மாவுக்கு உதவுகிறாள் அவள்.**

And she helps harvest the sweet potatoes, sugarcane, and maize from the rich soil.

वंगारी शक्करकंदी, गन्ने और मक्का की फसल काटने में माँ की मदद करती थी.



**பள்ளியில் சுட்டிப்பெண் வங்காரி. அந்தக் காடுகளில் இருக்கும் உயர்ந்த மரங்களைப் போல அவளும் வளர்ந்ததும், அமெரிக்கா சென்று படிக்க உதவித் தொகை பெறுகிறாள்.**

Wangari shines in school, and when she grows tall, like the trees in the forest, she wins a scholarship to study in America.

वंगारी स्कूल में फर्स्ट आई. जब वो जंगली पेड़ों जैसी ऊंची हुई तब उसने अमरीका में पढाई का स्कालरशिप जीता.



**ஆறு வருடங்கள் கழித்து, அவள் படிப்பு முடிந்தபின் தன் தாயகமான கென்யா திரும்புகிறாள் வங்காரி. மாற்றங்களைப் பார்க்கிறாள். என்ன ஆச்சு? அவள் மிரண்டாள். மரங்கள் எங்கே?**

Six years later, her studies over, Wangari returns to Kenya home and sees a change.W*hat has happened?* She wonders.W*here are the trees?*

छह साल अमरीका में पढ़ने के बाद जब वंगारी केन्या घर वापिस आई तो उसे सब कुछ बदला नज़र आया. *क्या हुआ?* वो अचरज करने लगी. *सारे पेड़ कहाँ गए?*



சுள்ளிக் கட்டைகள் சேர்க்க, மைல் கணக்கில் நடந்துநடந்து அதன் சுமையால் முதுகு வளைந்த பெண்களைப் பார்க்கிறாள் வங்காரி. பயிர் விளைய முடியாத தரிசு நிலங்களைக் காண்கிறாள். பறவைகள் எங்கே போயின?

Wangari sees women bent from hauling firewood miles and miles from home. She sees barren land where no crops grow.*And where are the birds?*

वंगारी ने देखा कि औरतें घर से मीलों चलकर, पीठ पर जलाऊ लकड़ी लादकर ला रही हैं. केन्या की ज़मीन बंजर हो गयी थी, अब वहां कोई फसल नहीं उगती थी. *सारी चिडिए कहाँ उड़ गयीं?*



**கட்டிடங்கள் கட்டுவதற்காக ஆயிரக்கணக்கான மரங்கள் வெட்டப்பட்டுவிட்டன. ஆனால், பதிலுக்கு யாருமே மரக்கன்றுகள் நட்டு வளர்க்கவில்லை. கென்யா முழுவதுமே பாலைவனம் ஆகிவிடுமோ? கண்ணீர் உருண்டோட, அவள் யோசிக்கிறாள்.**

Thousand of trees have been cut down to make room for buildings, but no one planted new trees to take their place. *Will all of Kenya become a desert?* She wonders as her tears fall.

नयी इमारते बनाने के लिए हजारों पेड़ काटे गए थे. पर उनकी जगह पर नए पेड़ नहीं लगाए गए.
*क्या पूरा केन्या इस तरह से रेगिस्तान बन जायेगा?* वो सोचती लगी और उसकी आँखों से आंसू टपकने लगे.



**தரிசு நிலங்களைப் பற்றி எண்ணிப் பார்க்கிறாள் வங்காரி, காணாமல்போன மரங்கள் சிலவற்றை நான் என் வீட்டுத் தோட்டத்தில் வளர்ப்பேன். அவற்றை ஒவ்வொன்றாக மீண்டும் வளர்க்கலாமே. ஒன்பது விதைகளை நட்டு இதனைத் துவக்குகிறாள் அவள்.**

Wangari thinks about the barren land *I can begin to replace some of the lost trees here in my own backyard –one tree at a time.*She starts by planting nine seedlings.

वंगारी बंजर ज़मीन के बारे में सोचती है. *मैं पहले अपने पिछवाड़े में ही कुछ पेड़ उगाती हूँ – एक पेड़ एक बार में.* फिर वंगारी नौ बीज बोती है.



விதைகள் முளைவிட்டு வேர்பிடிப்பதைப் பார்த்த வங்காரிக்கு நிறைய செடிகள் வளர்க்கவேண்டும் என்ற எண்ணம் பிறக்கிறது. மரக்கன்றுகளுக்கான காப்பகம், நர்ஸரி ஒன்றையும் ஆரம்பிக்கிறாள். அந்தச் சின்னசின்ன மரக்கன்றுகளை வரிசைவரிசையாய் திறந்த நிலப்பரப்பில் நடுகிறாள்.

Watching the seedlings take root gives Wangari the idea to plant more –to start a farm for baby trees, a nursery. In an open space, she plants row after row of the tiny trees.

बीजों में से अंकुर निकलते देख वंगारी और पेड़ लगाने का इरादा बनाती है. वो एक छोटे फार्म पर पौधों की नर्सरी लगाती है. फिर एक खुली जगह में वो छोटे-छोटे पौधों की कतारें लगाती है.



**மரக்கன்றுகள் நடுவது நன்மை தரும் என்று கிராமத்துப் பெண்களுக்குப் புரிய வைக்கிறாள் வங்காரி, ஒவ்வொருவருக்கும் ஒரு மரக்கன்றைத் தருகிறாள். "மரங்கள் மீண்டும் வளர்ந்தால், நம் வாழ்க்கை நல்ல மாற்றம் பெறும். நாம் நடுவது நம்பிக்கை விதைகளை!''**

Next Wangari convinces the village women that planting trees is a good thing. She gives each one a seedling."Our lives will be better when we have trees again. You'll see. We are planting the seeds of hope."

उसके बाद वंगारी गाँव की बाकी औरतों को पेड़ लगाने के महत्व के बारे में समझाती है. वो हर औरत को एक बीज देती है. "पेड़ वापिस आने से हमारी ज़िन्दगी बेहतर होगी. तुम इस बात को सच होते देखोगी. हम उम्मीद के बीज बो रहे हैं."



**கிராமத்தில் ஆங்காங்கே, வரிசைவரிசையாய் பெண்கள் சின்னச்சின்ன மரக்கன்றுகளை நடுகிறார்கள்.**

The women spread out over their village, planting tiny trees in long rows.

फिर सब औरतें मिलकर, पूरे गाँव में, लम्बी-लम्बी कतारों में बीज बोती हैं.



நிலத்தில் பச்சைசரிகை விரித்ததுபோல் இருந்தது.

Like a green belt stretching over the land.

धीरे-धीरे पेड़ों की एक हरी पट्टी, पूरी ज़मीन पर फ़ैल जाती है.



**அரசு அதிகாரிகள் நகைக்கிறார்கள். “அனுபவமிக்க வனச்சரகர்களால் மட்டும்தான் மரம் நடமுடியும்’’. பெண்மணிகள் அந்த கேலிப் பேச்சை உதாசீனம் செய்கிறார்கள், தொடர்ந்து மரம் நடுகிறார்கள்.**

The government men laugh.“Women can’t do this,”they say. “It takes trained foresters to plant trees.”The women ignore the laughter and keep planting.

सरकारी अफसर वंगारी पर हँसते हैं. “यह काम औरतों का नहीं है,” वे कहते हैं. “पेड़ तो केवल जंगल विभाग के प्रशिक्षित अफसर ही लगा सकते हैं.” महिलाएं, सरकारी अफसरों के तानों को अनदेखा करती हैं और लगातार पेड़ लगाती हैं.



மூன்று மாதம் தாண்டி வாழும் ஒவ்வொரு கன்றுக்கும் ஒரு சின்னத் தொகையை அவர்களுக்குத் தருகிறாள் வங்காரி. அவர்கள் முதன் முதலாக ஈட்டிய பணம் அது.

Wangari pays them a small amount for each seedling still living after three months – their first earnings ever.

अगर पौधे तीन महीने बाद भी जीवित रहते, तो वंगारी औरतों को उनके लिए कुछ पैसे देती. शायद यह उन औरतों की पहली कमाई थी.



வங்காரியின் கிராமத்துக்குப் பசுமை திரும்பும் செய்தியானது இலைகளினூடே சலசலத்துப் போகும் தென்றலைப் போலப் பரவியது.

Word travels, like wind rustling through leaves, about the green returning to Wangari’s village.

वंगारी का गाँव हरा-भरा हो रहा था, यह खबर तेज़ से तरह चारों ओर फैलती है.



கென்யாவின் பிற கிராமங்கள், சிற்றூர்கள், நகரங்களில் வாழும் பெண்களும், நீண்ட நீண்ட வரிசையில் விதை நடுகிறார்கள்.

Soon other women in other villages and towns and cities in Kenya are planting long rows of seedlings, too.

उसके बाद केन्या के अन्य गांवों, छोटे-बड़े शहरों में भी लोग, लम्बी-लम्बी कतारों में पौधे लगाने लगे.



ஆனால், மரம் வெட்டுவதும் தொடர்கிறது.

But the cutting continues.

पर पेड़ों की कटाई ज़ारी रहती है.



**நெடிதுயர்ந்து நிற்கும் மீதமிருந்த சில ஓக் மரங்களைக் காக்க, வங்காரியும் நிமிர்ந்து நின்றாள். ‘‘அலுவலகக் கட்டிடங்களைவிட நமக்குத் தேவை தோட்டங்களே’’.**

Wangari stands tall as an oak to protect the old trees still remaining.“We need a park more than we need an office tower.”

वंगारी बचे हुए पुराने पेड़ों की रक्षा करती है. “हमें ऊंची आफिस की बिल्डिंग से ज्यादा, पेड़ों से हरे-भरे पार्क की ज़रुरत है.”



அரசு அதிகாரிகள் ஒத்துக்கொள்ளவில்லை. அவர்கள் வழியில் தடங்கலாய் இருப்பதால், அவர்களின் தடி அவளைப் பதம் பார்க்கிறது. தொல்லை தருபவள் என குற்றம் சுமத்தி சிறைபடுத்துகிறார்கள்.

The government men disagree. Wangari blocks their way, so they hit her with clubs. They call her a troublemaker and put her in jail.

सरकारी अफसर वंगारी की बात से असहमत थे. क्यूंकि वंगारी ने उनका रास्ता रोका था, इसलिए उन्होंने वंगारी को लाठियों से मारा. उन्होंने वंगारी को उपद्रवी बताकर उसे जेल में डाल दिया.



அப்போதும் அவள் நிமிர்ந்து வானுயர்ந்து நிற்கிறாள். சரி என்பது சரியே, அது மாறாது, நீ தனிமைப்படுத்தப்பட்டாலும், தனித்து விடப்பட்டாலும்.

And still she stands tall. *Right is right, even if you are alone.*

वंगारी फिर भी अपनी बात से डिगी नहीं. *सही बात, सही होती है, चाहें तुम अकेले ही क्यूं न हो.*



ஆனால் வங்காரி தனியாள் இல்லை. மரங்கள் பற்றிய பேச்சு ஆஃப்ரிகா முழுதும், விக்டோரியா ஏரியின் நீரலைகளைப் போல பரவுகிறது.

But Wangari is not alone. Talk of the trees spread all over Africa like ripples in Lake Victoria.

पर इसमें वंगारी अकेली नहीं थी. लेक विक्टोरिया की लहरों जैसे पेड़ों की खबर पूरे अफ्रीका में तेज़ी से फ़ैली.



இதைக் கேள்விப்பட்ட மேலும் பல பெண்கள் முளைப்பயிர் நடுகிறார்கள். இன்னும் மிகமிக நீண்ட வரிசையில் முளைப்பயிர்கள் ஊன்றி, நெடுக வளர்கின்றன. ஒன்றுமே இல்லாத இடத்தில் மூன்று கோடிக்கும் அதிகமான மரங்கள் வளர்கின்றன.

More women hear the talk and plant even more seedlings in longer and longer rows. The seedlings take root and grow tall– until there are over 30 million trees where there was none.

यह खबर और महिलायों तक पहुंची. उसके बाद उन्होंने मिलकर लम्बी-लम्बी कतारों में और बीज लगाये. उन बीजों में से छोटे-छोटे अंकुर निकले जो बड़े हुए. अंत में वहां की बंजर ज़मीन, तीन करोड़ पेड़ों से लहलहाने लगी.



கென்யாவில் பசுமைக் குடை மீண்டும் படர்கிறது.

The umbrella of green in Kenya returns.

केन्या की ज़मीन दुबारा हरी-भरी हो गयी.



பெண்கள் கூன் அகன்று நிமிர்ந்து நடக்கிறார்கள், இப்போதுதான் வீட்டருகிலேயே தேவையான சுள்ளி கிடைக்கிறதே.

Women walk tall, their backs straight, for now they can gather firewood closer to home.

अब गाँव की औरतों को घर के आसपास ही जलाऊ लकड़ी मिल जाती थी. अब दूर से लकड़ी ढोने से, उनकी पीठ दुखती नहीं थी.



நிலம் இனியும் பாழாய் இல்லை. வள்ளிக்கிழங்கு, கரும்பு மற்றும் சோளம் வளமான செம்மண்ணில் மீண்டும் செழித்து வளர்கின்றன.

The land is no longer barren. Sweet potatoes, sugarcane, and maize grow again in the rich, red earth.

अब ज़मीन बंजर नहीं थी. उस लाल उपजाऊ मिटटी में दुबारा से शक्करकंदी, गन्ना और मक्का और अन्य फसलें उगने लगी थीं.



உலகம் முழுக்கவும் வங்காரியின் மரங்களைப் பற்றி கேள்விப்படுகிறது. அவற்றை நட்ட பெண்கள் படை பற்றியும்தான்.

The whole world hears of Wangari’s trees and of her army of women who planted them.

फिर पूरी दुनिया को वंगारी के पेड़ों, और पेड़ लगाने वाली औरतों की फौज की खबर सुनाई पड़ी.



இன்று கென்ய மலையின் உச்சியில் நீங்கள் ஏறினால், கோடானுகோடி மரங்களை அடியில் பார்க்கலாம்.

And if you are to climb to the very top of Mount Kenya today, you would see the millions of trees growing below you.

अगर आज आप माउंट केन्या की पहाड़ी पर चढ़ कर नीच देखेंगे तो आपको लाखों-करोड़ों पेड़ हवा में लहलहाते दिखेंगे.



**வங்காரி மீட்டெடுத்து வந்த பசுமையையும் பார்க்கலாம்.**

And the green Wangari brought back to Africa.

वंगारी ने अफ्रीका को दुबारा हरा-भरा बनाया.

‘‘நீருக்காகவும், உணவுக்காகவும் மக்கள் சண்டையிடுகிறார்கள். நாங்கள் அமைதியின் விதைகளை நடுகிறோம்’’. – வங்காரி மாதாய்

“People are fighting over water, over food. We plant the seeds of peace.” – Wangari Maathai

“लोग पानी, भोजन के बारे में लड़ रहे .... हम उम्मीद के बीज बोते हैं.”
– वंगारी माथाई

